# ஆய்தம் தனிநிலை ஏன்?

புலவர் வெற்றியழகன்






# ஆய்தம் தனி நிலை ஏன்?

(இலக்கணம்)

புலவர் வெற்றியழகன்

தலைவர், தொல்காப்பியர் தமிழ்ச்சங்கம்



**தனித்தமிழ்ப் பதிப்பகம்**

தனித்தமிழ் மனை

எண் : 21, இரண்டாவது முதன்மைச் சாலை

கிருட்டினன் நகர், குரோம்பேட்டை

சென்னை - 600 044

கைப்பேசி 99520 55085

## நூல் விளக்கம்

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | **ஆய்தம் தனிநிலை ஏன்?** |
| ஆசிரியர் | : | புலவர் வெற்றியழகன் |
| பொருள் | : | இலக்கணம் |
| உரிமை | : | ஆசிரியர்க்கே |
| மொழி | : | தமிழ் |
| முதற் பதிப்பு | : | திருவள்ளுவராண்டு - 2055<br>கி.பி. 2024 |
| தாள் | : | வெள்ளை |
| நூலின் அளவு | : | அரைக்கான் மடி 1/8 (தெம்மி) |
| பக்கங்கள் | : | 32 |
| எழுத்து | : | 12 புள்ளிகள் |
| கட்டு | : | இயல்பு |
| படிகள் | : | 1000 |
| விலை | : | உருவா 50/- |
| ஒளி அச்சு | : | வளர்தமிழ்க் கணினியகம் |
| வெளியீடு | : | தனித்தமிழ்ப் பதிப்பகம்<br>எண்: 21, இரண்டாம் முதன்மைச் சாலை,<br>கிருட்டினன் நகர், குரோம்பேட்டை,<br>சென்னை - 600 044<br>கைப்பேசி : 99520 55085 |

# முகவுரை

எம் மொழிக்கும் இணையில்லா மொழி நம் தமிழ்மொழி. தமிழ்மொழியின் சிறப்புகளை எழுதுதல் வேண்டுமானால், மிகப் பெரிய நூலாக எழுதலாம்.

ஓரிடத்தில் - கலந்துரையாடலில் - ஆய்த எழுத்தினைப் பற்றிய செய்தி எழுந்தது. அப்பொழுது - ஆய்த எழுத்தினது - தனிச் சிறப்பினை எடுத்துக் கூறினேன்.

அதனைக் கேட்ட நண்பர் - வேல்மதி - அதனை மட்டும் - ஒரு கட்டுரையாக எழுதித் தருமாறு கேட்டுக் கொண்டார். எழுதிக் கொடுத்தேன்.

"சொல்வயல்" என்னும் - தமிழ் நாட்டரசின் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர முதலித் திட்ட இயக்ககத்தின் சார்பில் திங்கள் தோறும் வெளிவந்து கொண்டிருக்கும் மின்னிதழில் வெளியிட்டார். இதனைப் படித்த அருமை நண்பர் - தேக் வாண்டோ இதழின் ஆசிரியர் பெ. சேகர் - அவரது தேக் வாண்டோ இதழில் வெளியிட்டார். ஏற்கெனவே பரணிப்பாவலனாரின் "புகழ்ச்செல்வி" இதழில் வெளிவந்த "ஆய்த எழுத்து ஓர் ஆய்வு" என்னுங் கட்டுரையினையும் - சொல்வயலில் வெளிவந்த "ஆய்த எழுத்து" மெய்யா? உயிர்மெய்யா? என்னுங் கட்டுரையினையும் இணைத்துள்ளேன்.

இரண்டனையும் படித்துச் சுவைத்த என் ஆருயிர் நண்பர் தனித்தமிழ்ச் செல்வர் கோ. பிச்சை வள்ளிநாயகன் இதனைத் தனியொரு நூலாகத் தான் வெளியீடுவதாகக் கூறினார். அதன்படியே - அவரது தனித்தமிழ்ப் பதிப்பகத்தின் வாயிலாக வெளியிட்டுள்ளார். அவர்க்கும் வேல்மதிக்கும், பெ. சேகர்க்கும் - இருந்தமர்ந்து - தங்கி எழுதுவதற்கு வாய்ப்பினை ஏற்படுத்திக் கொடுத்து எல்லா வகையிலும் உதவிக் கொண்டிருக்கின்ற ஜிவிஎஸ் அச்சக உரிமையாளர் ஞானதாசு, விமலா, சுந்தரராசன், கிளாரா அச்சக ஊழியர் அன்பு உள்ளத்தினைக் கொண்டிருப்போர் அனைவர்க்கும் எனது அளவற்ற நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறேன்

கருத்தூன்றிப் படிப்பீர்!

கன்னித் தமிழினது சிறப்பினை உணர்வீர்!

அன்பன்
புலவர் வெற்றியழகன்
15,சோசபு 2 ஆவது தெரு விரிவு,
பழவந்தாங்கல், சென்னை - 600 114
கைப்பேசி - 9789043139.

# பதிப்புரை

வியக்கவைக்கும் வித்தைகளைத் தன் அய்ம்பொறிகளால் ஆற்றி, மற்ற மாந்தரை மலைக்க வைத்திடும் திறன் மிக்கவனாக விளங்குபவன் மாந்தன், மாந்தவினம் மட்டுமே.

கால நேர்க்கோட்டில் தன் வினைகளை வெளிப்படுத்தும் ஆற்றல் உள்ளவன் இவனே. முக்கால பகுப்பினை ஒப்பி, இடவுணர்வும் அறிந்து சேர்க்கும் உயர்தனிச் செயற்பாடுகளை உடையவன் இவனே கால இடப் பரிமாற்றங்களை மூளை இயக்கத்தால் ஏற்பவனும் இவனே.

இவையனைத்திற்கும் மேலான வகையில் தான் கற்று ஏற்றதனைப் பிறர்க்குப் பயிற்றிடும் வல்லமை பெற்றவன் இவன் இனம் மட்டுமே கல், கற்பி என்பதே மூல முழக்கம். பகுத்தறிவு பெற்றுள்ளான் என்பதைப் பறை சாற்றும் அடையாளம்.

மாந்தவினத்தின் மாபெரும் கண்டுபிடிப்புதான் மொழியாகும்.

அய்ம்பொறிகளை மட்டுமே கொண்டு கடும் உழைப்பு, முயற்சி, ஆற்றல் ஆகியனவற்றால் வரப்பெற்றதுதான் அவனுக்கு இந்த ஆறாம் அறிவு. காற்றால் ஊதிப் பெருக்கவைப்படும் ஊதாம்பி (Balloon) போன்று அறிவு பெருகிப் பற்பல அறிவியல் துறைகளாக, பல்வேறு ஊழிகளில், துல்லியம் பெறுகின்றது.

அறிவியல் துறைகளின் விரிவாக்கத்திற்கு மொழிகண்டுபிடிப்பு தவிர்க்கவே இயலாத பங்கும் பாடும் ஆற்றுகிறது. வேறு எந்தவொன்றாலும் இட்டு நிரப்பவியலாத பகிர்வு மொழிக்குரியதாகும்.

அறிவியலின் முன்நோக்கிய பாய்ச்சலுக்கு மொழி சற்றும் சளைத்ததாகவே இல்லை.

மொழியை அறிவியல் என்றும் கருதிட இடம் அளிக்கிறது. (புதுப்புதுச் சொற் கருவிகளை / கலங்களை உருவாக்கித் தருவதனால்)

வேற்றுச் சாயல் ஒன்றில் கலையாக மொழியினை ஏற்கவேண்டியுள்ளது (அழகு செய்யும் அணி செய்யும் புதுப்புதுச் சுவையுடைய சொல்லால் ஆன இலக்கியங்களும் அதற்கான இலக்கணங்களும் படைக்கப்பெற்று வந்துள்ளமையால்)

சிறப்பான இவ்விரு கோலங்களைத் தாங்கிட வேண்டிய கடன் மொழிக்கு உண்டு. ஒளி பெருக்கும் விளக்காகப் பங்குப் பணியாற்றுவது மொழியென்றால் அதில் தவறொன்றுமில்லை. விளக்கு விளக்கிற்காக அன்று; மாறாக வெளிச்சப்பயன் கொள்வதற்காகவே என்பதுதானே மெய்.

அறிவியலின் விளைபயனாகப் பொறியியலும் தொழில்நுட்பமும் விரிகின்றன.

ஞால முதல்மொழியாய் விளங்கிடும் தம் மொழி > தமொழி > தமிழ் எல்லையிலா வான்போன்று விரிந்து பரந்து விளங்கிப் பயன்படுகிறது.

திருக்குறள் போன்ற பலப்பல இலக்கியங்களைக் கொண்டது நம் தமிழ்மொழி.

எவ்வளவு காற்றை ஊதினாலும் ஏற்று உடையாமல், ஊதிப் பெருத்து இன்றும் உலா வருவது என்றும் உலவிடும் தன்னாற்றல் மிக்கது தன்னேரில்லாத் தமிழ்மொழி.

ஊது காற்றாய், உள்நிறை காற்றாய் உயிர்க்காற்றாய் இன்றும் என்றும் விளங்குவது வாழ்வியல் மொழியியல் இலக்கண நூல் தொல்காப்பியம் அன்றோ.

உலகச் சிந்தனையாளர் வரிசைப்பட்டியலில் முதல் இடத்தினைத் தக்கவைத்துக் கொள்ளும் ஆற்றல் மிக்கவர் தொல்காப்பியர். தமிழரே மட்டுமின்றி வேற்றுமொழியினரும் பாராட்டிப் புகழ்ந்து உச்சி மோந்திடத் தக்க நூல் தொல்காப்பியம். இன்றளவும் அச்சிறப்பினை நிலை நிறுத்திக் கொள்ளும் தகுதி சான்றது தொல்காப்பியம்.

தொல்காப்பிய நூலின் நீள அகலங்களை ஆழத்தினைக் கற்றுத் தேர்ந்தவர் ஒல்காப் புகழ் பெற்ற நம்புலவர் வெற்றியழகன். இலக்கியங்கள் பலவற்றையும் படித்து அறிந்தவர் நினைவாற்றல் நிறைந்தவர். ஆழங்கால் பட்டவர். ஆதலின் துல்லியமாக இலக்கண இலக்கிய வகுப்புகளை அகவை நிறைந்தோர்க்கும், விளக்கமாக விரிவாக நடத்திடும் திறன் கைவரப்பெற்றவர்.

மணிக்கணக்கில், இடையே நீர் அருந்தாமல்கூட வகுப்பினை நடத்தும் எண்ணமும் திறனும் வாய்க்கப்பெற்றவர்.

அத்தகையவர் தமிழ் நெடுங்கணக்கில் இடம் பெற்றிருக்கும் “ஆய்தம் தனிநிலை ஏன்” என்ற அருமையான அரிய நுட்பம் வாய்ந்த நூலினை எம் பதிப்பகம் வழியாய் வெளியிட இசைவு தந்தமைக்கு என் நன்றியினை முதற்கண் வெளிப்படுத்துகிறேன்.

ஆய்வறிஞர்க்கே உரிய அத்துணைத் தகுதியுடன் தரவுகளைத் த்ந்து, தான் கொண்ட கோட்பாட்டினை நிறுவிடும் பாங்கு மிகச் சிறப்புக்குரியது.

இலக்கியம் கற்றோர் மட்டுமல்லாது இலக்கணிகளுக்கும் பயன் மிகத் தரவல்லது என்பதில் நான் உறுதியாகவுள்ளேன்.

தமிழ் உலகம் பயன்கொள்க.

**கோ. பிச்சைவள்ளிநாயகன்**

தனித்தமிழ்ப் பதிப்பகம்

சென்னை - 44.

# 1. ஆய்தம் தனி நிலை ஏன்

உலகத்தின் முதன் மொழி!

உலவுகின்ற மொழிகளுக்கெல்லாம் மூத்த மொழி!

உலக மொழிகளுக்கெல்லாம் வேராக விளங்கும் மொழி!

உலக முதல் மாந்தனாகிய தமிழனுக்கு உயிர் மொழி!

உயர்வான தமிழ் மொழி!

தமிழ் மொழிக்கு இலக்கண நூல் எழுதுவோருள் பெரும் பான்மையோர் உயிரெழுத்து, மெய்யெழுத்து என்று குறிப்பிட்டுவிட்டு ஆய்த எழுத்து - இது தனிநிலை என்றும்; ஆய்த எழுத்து உயிருடனும் சேராது; மெய்யுடனும் சேராது அதனால், தனிநிலை என்றும் குறிப்பிட்டுள்ளனர்.

ஆய்த எழுத்து உயிருடனும் சேரும் மெய்யுடனும் சேரும் உயிர்மெய்யாகவும் இயங்கும் என்பதனையும் நம் முன்னோர் பல்வேறு விதமான சிறப்புக் கருதியேதான் இதற்குத் தனிநிலை என்னும் பெயரைச் சூட்டியுள்ளனர் என்பதனையும் எடுத்துக் காட்டுவதே இந்நூலினது நோக்கம்.

சான்றோர் கூற்று

**"ஒய்தல் ஆய்தல் நிழத்தல் சாஅய்**
**ஆவயின் நான்கும் உள்ளதன் நுணுக்கம்"**

**(தொல்காப்பியம் : சொல் - 813)**

ஒய்தல், ஆய்தல், நிழத்தல், சாஅய் என்னும் நான்கு சொல்லும் உள்ள ஒரு பொருளின் நுட்பத்தினை உணர்த்துவன என்று ஒல்காப் புகழ் மிகுந்த தொல்காப்பியனார் கூறுகின்றார்.

"நலிபு வண்ணம் ஆய்தல் பயிலும்" என்று தொல்காப்பியச் செய்யுளியல் 1479ஆவது நூற்பா - நலிபு வண்ணம் நுட்பமானது என்கிறது.

"ஈறியல் மருங்கினும் இசைமை தோன்றும்" என்று தொல்காப்பியர் கூறுகிறார். இசைமை என்று தொல்காப்பியர் கூறுவது ஆய்தத்திற்குத் தனியான ஒலி உண்டு என்பதனை விளக்குவதற்கேயாகும்.

ஆய்தத்திற்குத் தனியானதோர் ஒலி இருப்பதனாலேயே ஆய்தம் தனித்து வைக்கப்பட்டிருக்கின்றது.

ஆய்தம் அரை உயிர்: அரை மெய்யுமான உயிர்மெய்யான எழுத்து என்றும்; ஆய்தம் இலக்கண நூலாரின் புலமை நெறியிலான படைப்பு என்றும் கால்டுவெல் - தமது திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் என்னும் நூலிற் கூறியுள்ளார்.

“தமிழிலுள்ள எழுத்துகளுள் குறைந்த நுண்ணிய ஒலியமைந்த எழுத்து ஆய்தம்” என்கிறார் முதுமுனைவர் இளங்குமரனார்.

ஆகையால், ஆய்தம் - நுட்பமான ஒலியினை உடையது. குறைவான ஒலியினை உடையது என்பதனை உணர்ந்துகொள்ளலாம்.

நெடுங்கணக்கில் - ஆய்தம் முதலாவதாக மெய் இரண்டாவதாக அடுத்து உயிர் எழுத்து - அதற்கடுத்து உயிர்மெய்யெழுத்து, என்னும் வைப்பு முறையில் அமைந்திருத்தல் வேண்டும் இவ்வாறு அல்லாமல் - உயிர் - மெய் - ஆய்தம் - உயிர்மெய் என்னும் அமைப்பில் அமைக்கப்பட்டிருப்பது பொருத்தமற்றதாகும்.

ஆய்த எழுத்துப் பல்வேறு வகையில் சிறப்பான எழுத்து என்றாலும் - நாம் - பார்க்கப் போவது - ஆய்த எழுத்து எந்தெந்த வகையில் அது தனிநிலை என்பதனை மட்டுமே.

ஆய்தம் தனிநிலை ஏன்?

உயிரெழுத்து - உயிரெழுத்து என்னும் ஒரே பெயரைப் பெற்றுள்ளது. - மெய்யெழுத்து; மெய்யெழுத்து; ஒற்றெழுத்து; புள்ளி எழுத்து என்று மூன்று பெயர்களைப் பெற்றுள்ளது.

ஆனால், ஆய்த எழுத்து

1. அஃகேனம்
2. கேடயம்
3. முப்புள்ளி
4. முப்பாற்புள்ளி
5. ஆய்தம்
6. ஒற்று
7. புள்ளி
8. புலுதம்
9. சார்பு

*10. நலிபு*

*11. ஒன்று*

*12. நுணுக்கம் (நுட்பம்)*

*13. தனி நிலை*

என்னும் பதின்மூன்று பெயர்களைக் கொண்டுள்ளது. அதனால் ஆய்தம் தனி நிலை. (1)

உயிரெழுத்தினைப் போலச் சொல்லுக்கு முதலெழுத்தாக ஆய்தம் அமையாது : சொல்லுக்கு இடையில் மட்டுமே அமையும் அதனாலும் ஆய்தம் தனிநிலை. (2)

காட்டு எஃகு

கஃசு

அஃது

இஃது

உஃது

குறிப்பு : தொல்காப்பியத்துக்குப் பின்பும் நன்னூலுக்கு முன்பாகவும் எழுந்த "நேமிநாதம்" என்னும் இலக்கண நூல் ஆய்தம் முதலெழுத்தாகவும் அமையும் என்கிறது. (காட்டுகள் தரவில்லை.) அதனாலும் தனிநிலை (3)

"ஆய்த எழுத்துதான் மற்ற முப்பத்திரண்டு எழுத்துகளையும் உருவாக்குகின்ற தாய் எழுத்தாக உள்ளது. எனவே, ஆய்த எழுத்து மட்டுமே முதல் எழுத்து" - என்று தொல்காப்பியச் சொற்பத உரையின் முடிவுரையில் மு. இராமலிங்கன், பகீரதன் ஆகியோர் கூறியுள்ளனர்.

குறில் எழுத்தில் தொடங்கிச் சொல்லின் இடையில் மட்டுமே ஆய்தம் அமையும். அதனாலும் ஆய்தம் தனிநிலை. (4) காட்டுகள் :

| | | |
|---|---|---|
| அஃக | இஃது | கஃசு |
| | | கஃறு |
| அஃகம் | உஃது | கஃறெனல் |
| | | சஃகுல்லி |
| அஃகல் | எஃகம் | சுஃறு |

| | | |
|---|---|---|
| அ.்.காமை | எ.்.கல் | சு.்.றெனல் |
| அ.்.கான் | எ.்.கு | ஞ.்.கான் |
| | | ப.்.து |
| அ.்.குல்லி | எ.்.குக்கோல் | ப.்.றி |
| அ.்.குள் | எ.்.குச்செவி | ப.்.றியா |
| அ.்.கேனம் | எ.்.குதல் | ப.்.றுளி |
| அ.்.தான்று | எ.்.குப்படுதல் | ம.்.கான் |
| | | வெ.்.கம் |
| அ.்.து | எ.்.குறுதல் | வெ.்.கல் |
| அ.்.தை | எ.்.குது | வெ.்.கா |
| அ.்.போதம் | ஒ.்.கல் | வெ.்.காமை |
| | | வெ.்.கி |
| அ.்.றிணை | ஒ.்.குதல் | வெ.்.குதல் |

எழுத்துகள் சில வெளிப்படையாக ஒலிப்பன. அ.்.தாவது எடுத்தொலிப்பன. எழுத்துகள் சில மங்கும் ஒலியில் ஒலிப்பன. அ.்.தாவது படுத்தொலிப்பன. ஆனால், ஆய்த எழுத்து எடுத்தும் படுத்தும் ஒலிப்பது. அதனாலும் ஆய்த எழுத்துத் தனிநிலை (5) எனப் பெற்றது.

காட்டு :- எடுத்தொலிப்பது : அகு

படுத்தொலிப்பன : எ.்.கு

க.்.சு

அ.்.து

இ.்.து

உ.்.து

அ.்.

அ.்.றிணை

மு.்.டீது

ஆய்த எழுத்து தனித்து இயங்கும். மெய்யெழுத்தினைப் போல் தனித்து இயங்குவதில்லை. தனித்து இயங்கும் உயிரெழுத்தினைப் போலவும் தனித்து இயங்குவதில்லை. அதனாலும் ஆய்தம் - தனிநிலை.

(6)

காட்டு:- எ∴கு, க∴சு, அ∴து, இ∴து, உ∴து, அ∴றிணை, ப∴றுளி, மு∴டீது.

தமிழ் எழுத்துகளின் நெடுங்கணக்கில் உயிரெழுத்தினுக்கும் மெய்யெழுத்தினுக்கும் இடையில் ஆய்தம் வைக்கப் பெற்றிருக்கிறது. ஏன் எனில்?

ஆய்தம் மேலே அமைந்துள்ள உயிரெழுத்தாகவும் இயங்கக் கூடியது. கீழே அமைந்துள்ள மெய்யெழுத்தாகவும் இயங்கக் கூடியது என்னும் நிலையினைக் குறிப்பாக உணர்த்தவே இவ்வாறு உயிர்க்கும் மெய்க்கும் இடையில் வைக்கப் பெற்றுள்ளது. அதனாலும் ஆய்தம் தனிநிலை (7)

ஆய்தம் உயிராகவும் விளங்கும் : மெய்யாகவும் விளங்கும் என்பதனை உணர்த்தவே இவ்வாறு அமைக்கப் பெற்றுள்ளது (8)

அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, அய், ஐ, ஒ, ஓ, அவ், ஔ

∴

க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற், ன்.

உயிர்மெய்யெழுத்தினுக்கு என்று தனித்த ஒலி என்று ஒன்று இல்லை. உயிர் மெய்யில் இணைந்திருக்கின்ற உயிரெழுத்துக் குறிலாக இருப்பின் அந்தக் குறிலின் ஒலியும்: உயிர் நெடிலாக இருந்தால் அந்த நெடிலின் ஒலியும்தாம் ஒலிக்கும். ஆனால் ஆய்தத்தில் எந்த உயிரும் சேராமல் - உயிரின் ஒலியும் மெய்யின் ஒலியும் சேர்ந்து ஒலிப்பதனால் - ஆய்தத்தின் ஒலிக்குப் புணரொலி என்று ஆய்தத்தின் ஒலியைக் குறித்துள்ளனர் இலக்கணச் சான்றோர். அதனாலும் ஆய்தம் தனிநிலை (9)

காட்டு
க் + அ = க ;
க் + ஆ = கா ;
க் + இ = கி ;
க் + ஈ = கீ ;
க் + உ = கு ;
க் + ஊ = கூ ;
க் + எ = கெ ;
க் + ஏ = கே ;
க் + ஒ = கொ ;
க் + ஓ = கோ ;

ஆய்தம் அரை உயிர் : அரை மெய் என்கிறார் கால்டுவெல் .அதனாலும் ஆய்தம் தனிநிலை *(10)*

வகரத்தினையும் யகரத்தினையும் அரை உயிர் என்று மேலும் சிலர் குறித்துள்ளனர் என்பதும் கருதத் தக்கது.

உயிரெழுத்துகள் பன்னிரண்டுக்கும் மெய்யெழுத்துகள் பதினெட்டுக்கும் இல்லாத ஒலி ஆய்த எழுத்திற்கு இருப்பதனால், ஆய்தம் தனிநிலை. *(11)*

ஆய்தத்துடன் உயிர் சேராமலேயே உயிரொலியைத் தருவது ஆய்த எழுத்து என்கிறார், தொல்காப்பியத்தின் உரையாளர் நச்சினார்க்கினியர். அதனாலும் ஆய்தம் தனிநிலை. *(12)*

காட்டு :- தீர்த்தல் அஃதொருவன் ( அகுதொருவன் )

உயிரெழுத்துகளும் மெய்யெழுத்துகளும் வட்டம், கோடு என்று வரிவடிவத்தினைப் பெற்றிருப்பதனைப் போன்று வட்டமும் கோடும் பெறாமல் புள்ளியை மட்டும் பெற்ற எழுத்தென விளங்குவதனால், ஆய்தம் தனிநிலை. *(13)*

காட்டு :- இ - வட்டம் , கோடு

கூ - வட்டம் , கோடு

க் - வட்டம் , கோடு, புள்ளி

ஃ - புள்ளி

யாப்பிலக்கணத்தில் அலகு பெறும் நிலையும் அலகு பெறாத நிலையும் வேறு எந்த எழுத்துக்கும் இல்லை. ஆய்த எழுத்துக்கு மட்டுமே இருப்பதனாலும் ஆய்தம் தனிநிலை *(14)*

ஆய்தம் அலகு பெறும் நிலையில் பதின்மூன்று குறள்களிலும்; அலகு பெறாத நிலையில் நாற்பத்து மூன்று குறள்களில் நாற்பத்தாறு இடங்களில் (175, 176, 178 ஆகிய மூன்று குறள்களில் இரண்டிரண்டு இடங்களில்) என்று ஆக மொத்தம் அயம்பத்தாறு குறள்களில் அய்ம்பத்தொன்பது இடங்களில் ஆய்தத்தினைத் திருவள்ளுவர் பயன்படுத்தியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

ஆய்தத்தினை அனைவரும் மெய்யெழுத்துத் தன்மையிலேயே பயன்படுத்தியுள்ளனர். ஆனால், திருவள்ளுவர் ஒருவர் மட்டுமே மெய்யெழுத்து, உயிர்மெய்யெழுத்து என இருநிலையிலும் பயன்படுத்தி யுள்ளார். ஆய்தம், இவ்வாறு இருநிலையில் இயங்குவதனாலும் அது தனிநிலை. *(15)*

## அலகு பெறும் குறள்கள் - 13

அஃ.தாவது ஆய்தத்தினை உயிர் மெய்யாகப் பயன்படுத்திய குறள்கள்

1. அறத்தா றிஃதென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தா னிடய். (திருக். 37)

2. அன்பீனு மார்வ முடய்மய் அஃதீனும்
நண்பென்னு நாடாச் சிறப்பு. (திருக். 74)

3. அற்றா ரழிபசி தீர்த்த லஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி. (திருக். 226)

4. ஈத லிசைபட வாழ்த லஃதல்ல
தூதியம் இல்லய் யுயிர்க்கு. (திருக். 231)

5. வேண்டாமய் யன்ன விழுச்செல்வம் ஈண்டில்லய்
யாண்டு மஃதொப்ப தில். (திருக். 363)

6. கற்றில னாயினுங் கேட்க அதொருவற்
கொற்கத்தின் ஊற்றாந் துணய். (திருக். 414)

7. பொச்சாப்பார்க் கிலலய் புகழ்மய் அஃதுலகத்
தெப்பால்நூ லோர்க்குந் துணிவு. (திருக். 533)

8. இழுக்காமய் யார்மாட்டு மென்றும் வழுக்காமய்
வாயி னஃதொப்ப தில். (திருக். 536)

9. கல்லார்ப் பிணிக்குங் கடுங்கோல் அஃதல்ல
தில்லய் நிலக்குப் பொறய். (திருக். 570)

10. அற்றா லளவறிந் துண்க அஃதுடம்பு
பெற்றான் நெடிதுய்க்கு மாறு. (திருக். 943)

11. பண்புடையார்ப் பட்டுண் டுலகம் அஃதின்றேல்
மண்புக்கு மாய்வது மன். (திருக். 996)

12. கவ்வய்யால் கவ்விது காமம் அஃதின்றேல்
தவ்வென்னுந் தன்மய் இழந்து. (திருக்.1144)

13. இன்பம் கடல்மற்றுக் காமம் அஃதடுங்கால்
துன்பம் அதனிற் பெரிது. (திருக்.1166)

குறிப்பு : ஆய்தம் அலகு பெறுவதனை அடிக்கோடிட்ட இடங்களைப் பொருத்திப் பார்த்துக் கொள்க.

**ஆய்தம் அலகு பெறாக் குறள்கள் - 43 அஃதாவது - ஆய்தத்தினை மெய்யாகப் பயன்படுத்திய குறள்கள்.**

1. வீழ்நாள் படாஅமை நன்றாற்றின் அஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல். (திருக். 38)
2. அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை அஃதும்
பிறன்பழிப்ப தில்லாயின் நன்று. (திருக். 49)
3. அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார்
மறத்திற்கும் அஃதே துணை. (திருக். 76)
4. அன்பின் வழிய துயிர்நிலை யஃதிலார்க்
கென்புதோல் போர்த்த வுடம்பு. (திருக். 80)
5. பரிந்தோம்பிக் காக்க ஒழுக்கம் தெரிந்தோம்பித்
தேரினு மஃதே துணை. (திருக். 132)
6. விழுப்பேற்றின் அஃதொப்ப தில்லை யார்மாட்டும்
அழுக்காற்றின் அன்மை பெறின். (திருக். 162)
7. அழுக்கற் றகன்றாரும் இல்லைஅஃ தில்லார்
பெருக்கத்தின் தீர்ந்தாரு மில். (திருக். 170)
8. நடுவின்றி நன்பொருள் வெஃகின் குடிபொன்றிக்
குற்றமும் ஆங்கே தரும். (திருக். 171)
9. படுபயன் வெஃகிப் பழிப்பவே செய்யார்
நடுவன்மை நாணு பவர். (திருக். 172)
10. சிற்றின்பம் வெஃகி அறனல்ல செய்யாரே
மற்றின்பம் வேண்டு பவர். (திருக். 173)
11. இலமென்று வெஃகுதல் செய்யார் புலம்வென்ற
புன்மையில் காட்சி யவர். (திருக். 174)
12. அஃகி யகன்ற அறிவென்னாம் யார்மாட்டும்
வெஃகி வெறிய செயின். (திருக். 175)
13. அருள்வெஃகி யாற்றின்கண் நின்றான் பொருள்வெஃகிப்
பொல்லாத சூழக் கெடும். (திருக். 176)
14. வேண்டற்க வெஃகியாம் ஆக்கம் விளைவயின்
மாண்டற் கரிதாம் பயன். (திருக். 177)

15. அஃகாமய் செல்வத்திற்கி யாதெனின் வெஃகாமை
வேண்டும் பிறன்கைப் பொருள். (திருக். 178)

16. அறனறிருந்து வெஃகா அறிவுடையார்ச் சேரும்
திறனறிந் தாங்கே திரு. (திருக். 179)

17. இறலீனும் எண்ணாது வெஃகின் விறலீனும்
வேண்டாமய் என்னுஞ் செருக்கு. (திருக். 180)

18. ஒப்புரவி னால்வரும் கேடெனின் அஃதொருவன்
விற்றுக்கோள் தக்க துடய்த்து. (திருக். 220)

19. தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலின் தோன்றாமய் நன்று. (திருக். 236)

20. நல்லாற்றால் நாடி அருளாள்க பல்லாற்றால்
தேரினும் அஃதே துணய். (திருக். 242)

21. தவமும் தவமுடய்யார்க் காகும் அவமதனய்
அஃதிலார் மேற்கொள் வது. (திருக். 262)

22. அவாவில்லார்க் கில்லாகும் துன்பம்அஃ துண்டேல்
தவாஅது மேன்மேல் வரும். (திருக். 368)

23. அறிவுடய்யார் ஆவ தறிவார் அறிவிலார்
அஃதறி கல்லா தவர். (திருக். 427)

24. மனநலத்தி னாகும் மறுமய்மற் றஃதும்
இனநலத்தி னேமாப் புடய்த்து. (திருக். 459)

25. நுனிக்கொம்பர் ஏறினார் அஃதிறந் தூக்கின்
உயிர்க்கிறுதி யாகி விடும். (திருக். 476)

26. ஓர்ந்துகண் ணோடா திறய்புரிந்தி யார்மாட்டும்
தேர்ந்துசெய் வஃதே முறய். (திருக். 541)

27. மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மய் அஃதின்றேல்
மன்னாவாம் மன்னர்க் கொளி. (திருக். 556)

28. கண்ணோட்டத் துள்ள துலகிய லஃதிலா
ருண்மய் நிலக்குப் பொறய். (திருக். 572)

29. கண்ணிற் கணிகலம் கண்ணோட்டம் அஃதின்றேல்
புண்ணென் றுணரப் படும். (திருக். 575)

30. உடய்யர் எனப்படுவ தூக்கமஃ தில்லார்
உடய்ய துடய்யரோ மற்று. (திருக். 591)

31. உரமொருவற் குள்ள வெறுக்கய்யஃ தில்லார்
மரமக்க ளாதலே வேறு. (திருக். 600)

32. இடுக்கண் வருங்கால் நகுக அதனய்
அடுத்தூர்வ தஃதொப்ப தில். (திருக். 621)

33. செய்க பொருளய்ச் செறுநர் செருக்கறுக்கும்
எஃகதனிற் கூரிய தில். (திருக். 579)

34. பேராண்மய் என்ப தறுகணொான் றுற்றக்கால்
ஊராண்மய் மற்றதன் எஃகு. (திருக். 773)

35. ஒளியொருவற் குள்ள வெறுக்கய் இளியொருவற்
கஃதிறந்து வாழ்து மெனல். (திருக். 971)

36. வய்த்தான்வாய் சான்ற பெரும்பொருள் அஃதுண்ணான்
செத்தான் செயக்கிடந்த தில். (திருக். 1001)

37. அணியன்றோ நாணுடய்மய் சான்றோர்க்கஃ தின்றேல்
பிணியன்றோ பீடு நடய். (திருக். 1014)

38. உழுவார் உலகத்தார்க் காணியஃ தாற்றா
தெழுவாரய் எல்லாம் பொறுத்து. (திருக். 1032)

39. தொடிப்புழுதி கஃசா உணக்கின் பிடித்தெருவும்
வேண்டாது சாலப் படும். (திருக். 1037)

40. நோக்கினாள் நோக்கி இறய்ஞ்சினாள் அஃதவள்
யாப்பினுள் அட்டிய நீர். (திருக். 1093)

41. மறய்ப்பேன்மன் யான்னிஃதோ நோய்யய் இறய்ப்பவர்க்
கூற்றுநீர் போல மிகும். (திருக். 1161)

42. தொடிநோக்கி மென்தோளும் நோக்கி அடிநோக்கி
அஃதாண் டவள்செய் தது. (திருக். 1279)

43. நோதல் எவன்மற்று நொந்தாரென் றஃதறியும்
காதலர் இல்லா வழி. (திருக். 1308)

*(குறிப்பு : அடிக்கோடிட்ட இடங்களில் ஆய்தத்தினைப் பொருத்திப் பார்த்துக் கொள்ளவும் - ஆய்தம் அலகு பெறாததனை)*

ஆய்த எழுத்தினையும் சமற்கிருத எழுத்துதான் என்று கவர்ந்து கொள்ளக் கருதிய மு.இராகவ அய்யங்கார் “ஆராய்ச்சி” என்னும் நூலில் பெரிதும் முயன்றுள்ளார் என்று கூறிய பாவேந்தர் “வந்தவர் மொழியா? செந்தமிழ்ச் செல்வமா?” என்னும் நூலில் - ஆய்தல், அகம், ஆயல் தகம், ஆய்தகம், ஆய்தம் என்று ஆனது ஆய்த எழுத்து வல்லெழுத்தைச் சார்ந்தே வருவது என்கிறார். அதனாலும் இது தனிநிலையே (16)

குறிப்பு: இந்த இடத்தில் நன்னூல் எழுதிய பவணந்தி முனிவரையும் இலக்கணக் கொத்து எழுதிய சாமிநாத தேசிகரையும் சிந்தித்துப் பார்க்கலாம். இவ்விருவரும் தமிழ்க்குக் கேடு சூழ்ந்தவரே. பவணந்தி முனிவர் வாழைப் பழத்துள் ஊசியை நுழைத்தார்: சாமிநாத தேசிகர் நமது உடம்பிலேயே ஊசியால் குத்தினார். மருந்தூசி இல்லை; குத்தூசி.

நன்னூலாரைப் பார்ப்போம்,

**“ற ன ழ எ ஒவ்வும் உயிர்மெய் உயிரளபு**
**அல்லாச் சார்பும் தமிழ்பிற பொதுவே”** **( நன்னூல் -150 )**

தமிழ் மொழியில் முதலெழுத்து, சார்பெழுத்து நாற்பத்தோர் எழுத்துகளுள் ற, ன, ழ, எ, ஒ என்னும் அய்ந்து முதல்எழுத்துகளும் உயிர்மெய்யும் உயிரளபெடையும் அல்லா ஏனைய எட்டுச் சார்பெழுத்துகளும் தமிழ்க்கே உரிய சிறப்பெழுத்துகளாகும் என்று நன்னூலின் ஆசிரியர் பவணந்தி முனிவர் கூறியுள்ளார்.

இதனைப் படித்த சுவாமிநாத தேசிகர் “அய்ந்தெழுத்தால் ஒரு பாடை அறையவும் நாணுவர் அறிவுடையோரே” என்று பாடினார், இலக்கணக் கொத்து என்னும் நூலில்.

இதன் பொருள் : “தமிழ் மொழிக்கு என்ன சிறப்பு என்றால் ற, ன, ழ, எ, ஒ ஆகிய அய்ந்து எழுத்துகள்தாம் சிறப்பாக இருக்கின்றன மற்ற எழுத்துகள் அனைத்தும் சமற்கிருதத்தில் இருக்கின்றன. சமற்கிருதத்தில் இல்லாத ஓர் அய்ந்தெழுத்தை வைத்துக் கொண்டு பெருமை பேசினால் அறிவுடையோர் நாணப்படுவர் என்கிறார் சுவாமிநாத தேசிகர்.

இவ்வைந் தெழுத்துகளும் பின்னால் காலங்கடந்து உருவாக்கி இணைக்கப் பெற்றவை. இந்த அய்ந்தெழுத்தும் தமிழில் இல்லாத போது.

அப்பொழுதிருந்த தமிழ் எழுத்தினை அப்படியே எடுத்துக் கொண்டனர் சமற்கிருதத்தினைச் செப்பம் செய்தபோது. அதனால்தான் அவ் வைந்தெழுத்துகள் சமற்கிருதத்தில் இல்லை.

ஆரியம், பாலி, பிராகிருதம், கிரந்தம், தமிழ் இவ் வைந்து மொழியினை வைத்தே சமற்கிருதத்தினை உருவாக்கினர். நோக்கம், இவ்வைந்து மொழியும் அழிந்துவிடும்; சமற்கிருதம் மட்டுமே நிலைக்கும் என்பதாகும். ஆனால், ஆரியம், பாலி, பிராகிருதம், கிரந்தம் ஆகிய நான்குமொழிகளும் அழிந்துவிட்டன. உடன் சமற்கிருதமும் செத்தது. தமிழ் மட்டுமே வென்று நிற்கின்றது.

தமிழர் முதலில் - ர என்னும் இடைமின ரகரத்தினையே, (வல்லினம் போன்ற) எல்லாவற்றுக்கும் பயன்படுத்தினர். பிறகு உருவாக்கித் தமிழ் எழுத்துள் சேர்க்கப் பெற்றது வல்லின ற (இரட்டை ரகரம் சேர்ந்தாற் போன்ற வரிவடிவம்) ஒலியும் வல்லொலி.

தமிழர் ந, ண என்னும் இரண்டு எழுத்துகளையே பயன்படுத்திக் கொண்டிருந்தனர். அதன்பிறகே ன என்னும் றன் னகரம் உருவாக்கப் பெற்றுத் தமிழ் எழுத்துடன் இணைக்கப் பெற்றது (றகரத்தினை அடுத்து இடம் பெற்றது)

தமிழர் முதலில் ல - வும் , ள- வும் மட்டுமே பயன்படுத்திக் கொண்டிருந்தனர். பிறகு உருவாக்கி இணைக்கப் பெற்ற ழகர எழுத்துப் பின்னர்த் தமிழ்க்குச் சிறப்பெழுத்தென விளங்குகின்றது.

தமிழர் முதலில் -எ - என்னும் எழுத்தினையே நெடிலாகப் பயன்படுத்தினர் எணி - என்று இப்படித்தான் எழுதினர். எ - என்னும் நெடிலைக் குறிலாக அமைக்க அதன்மீது புள்ளி இட்டு எ் லி - என்று எழுதினர். இதனைப் போன்றே - ஒ - என்னும் எழுத்தினை ஒணான் என்று நெடிலாகப் பயன்படுத்தி எழுதினர். அதனைக் குறிலாக ஆக்குவதற்கு, அதன் மீது புள்ளியிட்டனர் ஒ்ன்று - என்று எழுதினர்.

இந்தச் சிந்தனை - நம் - முன்னோர்க்கு வருவதற்குக் காரணம் - க என்றால் ஒரு மாத்திரை அளவுடைய உயிர்மெய்யெழுத்து அந்தக் க - மீது -க் - என்று புள்ளி வைத்துவிட்டால் அரை மாத்திரை உடைய மெய்யெழுத்தாகிக் குறைந்து ஒலிப்பதனைக் கண்ட நம் முன்னோர் அந்தச் சிந்தனையைப் பயன்படுத்தி வந்தனர்.

வீரமாமுனிவர் வந்து - தமிழ்மொழிக்கு அவர் செய்த தொண்டுகளுள் - இதுவும் ஒன்று.

தொல்காப்பியத்தில்கூட-

"மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல்"

(தொல் : எழுத்து : 15)

"அகர ஒகரத்து இயற்கையும் அற்றே"

(தொல் : எழுத்து : 16)

என்று நூற்பாவினைத் தந்துள்ளார், தொல்காப்பிய எழுத்ததிகாரத்தில் மெய்யெழுத்துப் புள்ளி பெற்றிருப்பது இயற்கையான ஒன்றுதான் ஆனால், உயிரெழுத்திலும் புள்ளி ஏன் அமைந்திருத்தல் வேண்டும் என்று, எ் மேலே இருந்த புள்ளியை நீக்கினார், எ என்று குறிலாக்கினார். ஏ - என்று கொஞ்சம் நீட்டினார். நெடிலாக்கி ஒ் - என்று இருந்த புள்ளியை நீக்கி ஒ - என்று குறிலாக்கினார், ஓ - என்று கீழே சுழித்து நெடிலாக்கினார்.

வீரமாமுனிவர் - தமிழ் எழுத்துச் சீர்திருத்தம் செய்த முதலாமவர்.

வீரமாமுனிவர் செய்தது - 1700 க்குப் பிறகுதான், அதனால்தான் சமற்கிருதத்தில் இருக்கின்ற நெடில் எ; நெடில் ஒ. குறில் - எ: குறில் - ஒ இல்லை.

சமற்கிருத மொழியில் - அதன் வழிவந்த மொழிகளில் எலி, எருது என்று எழுத முடியாது : ஏலி, ஏருது என்றுதான் எழுத முடியும்.

இதனைப் போன்றே - ஒன்று, என்றும்; தொல்காப்பியம் என்றும் எழுத முடியாது. ஓன்று என்றும் தோல்காப்பியம் என்றும்தாம் எழுதிட முடியும்.

தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்தினர் தொல்காப்பியத்தினை இந்தியில் மொழிபெயர்த்து எழுதி வெளியிட்டுள்ளனர்.

அந்தத் தலைப்பைப் படித்துப் பாருங்கள் தோல்காப்பியம் என்றுதான் இந்தியில் இருக்கின்றது.

யகர மெய்யெழுத்துக்குச் சமமான எழுத்தாக எதுகையில் பயன் படக்கூடிய எழுத்து ஆய்த எழுத்து.

காட்டு :- அஃதிவண் நுவலாது எழுந்து நின்று புறத் திசைக்கும் மெய் தெரி வளியிசை அளபு நுவன்றிசினே என்று தொல்காப்பியர் - தொல்காப்பியத்தின் நூற்று மூன்றாவது நூற்பாவில் பயன்படுத்தி யுள்ளார். அதனாலும் ஆய்தம் தனிநிலை (17)

ஆய்த வொலி திரிபொலி என்று சிலர் கூறினர். அது திரிபொலி இல்லை; ஆய்தத்தின் ஒலி அதற்குண்டான இயல்பான ஒலியே என்று க. வீரகத்தி என்றவர் தமது "இலக்கண விதிமூலங்களும் விதிகளும்" என்ற நூலில் மறுத்துள்ளார்.

மற்ற எழுத்துகள் திரிபொலியை ஏற்கின்ற நிலைமை உண்டு. ஆனால், ஆய்த எழுத்துக்குத் திரிபொலியை ஏற்கின்ற நிலை இல்லாததனால் ஆய்தம் தனிநிலைதான். *(18)*

உயிரெழுத்துகள் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வோர் ஒலிதான் உள்ளது.

மெய்யெழுத்துகளுக்கும் ஒவ்வோர் ஒலிதான் உள்ளது.

காட்டு :- அ,ஆ, க்,ங் ஆனால், ஆய்த எழுத்துக்கு இரண்டு ஒலிகள் இருக்கின்றன அ∴, அகு என்பன அவை. அதனாலும் ஆய்தம் தனிநிலை. *(19)*

அ∴ என்று ஒலிக்கும் போது - ஒலி- வாய்க்குள்ளேயே அமைந்து விடுகிறது. அதனால்தான் அதற்கு நுட்பமான ஒலி என்று பெயர் அகு - என்று ஒலிக்கும் போதுதான் ஒலி வாயை விட்டு வெளியே வருகின்றது இம் மாதிரியான ஈரொலி தனியான எந்த எழுத்துக்கும் இல்லை அதனாலும் ஆய்தம் தனிநிலை. *(20)*

மெய்யெழுத்துகள் அனைத்தும் மேலே புள்ளி பெற்றே - மெய்யெழுத்துகளாக விளங்குகின்றன. ஆனால், ஆய்த எழுத்து மட்டும் மேலே புள்ளி பெறுகின்ற நிலை இல்லாமலேயே மெய்யெழுத்தாக விளங்குகின்றது. அதனாலும் அது தனிநிலை. *(21)*

குறிப்பு : ஆய்த எழுத்து முழுமையான முற்றாய்தம் ... இவ்வாறு இரு புள்ளி பெற்ற உயிர் எழுத்தாகவும் - அது மெய்யெழுத்தாக மாறும் பொழுது மட்டும் ∴ இவ்வாறு மேலே ஒரு புள்ளி பெற்றதாகவும் ஒரு செய்தியிருக்கிறது. அதுவும் சரியென்றே தோன்றுகிறது. அதனாலும் ஆய்தம் தனிநிலை. *(22)*

"குற்றியலிகரம் , குற்றியலுகரம், முப்பால் புள்ளியும் எழுத்தோ ரன்ன " (தொல்காப்பியம் -நூற்பா - 3)

தமிழ்ச்சொல் அமையும் பொழுது ஒரு சொல்லின் தொடக்க எழுத்து - குறிலாகவும் - அல்லது நெடிலாகவும் இடையில் மெய் - குறில் - நெடில் என்றும் : சொல்லின் இறுதியில் - குறில் - நெடில் - மெய் என்றெல்லாம் அமையும். ஆனால், ஆய்தம் இடையில் மட்டுமே பயன்படும் . அதனாலும் அது தனிநிலை. *(23)*

காட்டு : அ∴து, இ∴து, உ∴து, ப∴து, அ∴றிணை, ப∴றுளி.

க் முதல் ன் வரை ஒவ்வோர் எழுத்துக்கும் ஒவ்வொரு குடும்பம் இருக்கின்றது (12 உயிர்களும் 18 மெய்களும் புணர்ந்து பிறக்கும் 216 எழுத்துகள்) காட்டு க, கா, கி, கீ, கு, கூ, கெ, கே, கய், கொ,

கோ, கவ் என்பன போன்று. ஆனால் குடும்பமே இல்லாத தனித்துறவு எழுத்தாக ஆய்தம் விளங்குகின்றது அதனாலும் ஆய்தம் தனிநிலை (24)

ஆய்த எழுத்து - குடும்பம் இல்லாத துறவு எழுத்து என்பதனால், எந்தத் துணையும் தேவையில்லாமல் அ..தாவது துணை எழுத்துகள் /துணைக் குறிகள் ா, ெ, ே, ை ஆகியவையும் மேல்விலங்கு கீழ்விலங்கு உள்ளிட்ட குறியீடுகளும் தேவையில்லாமலேயே ஆய்த எழுத்துத் தனித்து இயங்குவதனாலும் ஆய்தம் தனிநிலை. (25)

தமிழ் எழுத்துகளை ஒலிப்பதற்குக் கரம், காரம், கான் என்னும் சாரியைகளை இட்டு ஒலித்தல் வேண்டும். ஆனால், ஆய்த எழுத்துக்கு அ..கேனம் என்று "ஏனம்" என்னும் சாரியையை இட்டு ஒலித்தல் வேண்டும். அதனாலும் ஆய்தம் தனிநிலை. (26)

வல்லின எழுத்துகள் மார்பில் பிறக்கின்றன: மெல்லின எழுத்துகள் மூக்கில் பிறக்கின்றன: இடையின எழுத்துகள் தொண்டையில் பிறக்கின்றன. ஆனால், ஆய்த எழுத்து இம்மூன்று இடங்களிலும் பிறக்காமல் மண்டையில் பிறக்கின்றது அதனாலும் ஆய்தம் தனிநிலை. (27)

மெய்யெழுத்துகளை நமது வாயினால் ஒலிக்கும் பொழுது இ என்னும் உயிரெழுத்துடன் சேர்த்துதான் இக், இங் என்று ஒலிக்கமுடியும். அவற்றைப்போல், ஆய்த எழுத்தினை ஒலிக்கும்போது அ.. என்று அ என்னும் உயிரெழுத்தினைச் சேர்த்துதான் ஒலிக்க முடியும். அதனாலும் ஆய்தம் தனிநிலை. (28)

தமிழ் எழுத்துகள் - மகரக் குறுக்கம் - கால் மாத்திரை பெறும். மெய்யெழுத்துகள், குற்றியலுகரம், குற்றியலிகரம் ஆகியவை அரை மாத்திரை பெறும். உயிர்க்குறில் ஒரு மாத்திரை பெறும். நெடில் இரண்டு மாத்திரை பெறும். அளபெடை மட்டுமே மூன்று மாத்திரை பெறும் . ஆய்தம் - ஆய்தக் குறுக்கமாக அமையும்பொழுது கால் மாத்திரை. ஆய்தம் மெய்யாக அமையும்பொழுது அரை மாத்திரை, உயிர்மெய்க் குறிலாக அமையும் பொழுது ஒரு மாத்திரை என்னும் மூன்று வகையான ஒலியும் மூன்று வகையான - மாத்திரை அளவும் ஆய்தம் பெறுவதனாலும் ஆய்தம் தனிநிலை. (29)

ஆய்த எழுத்தினைத் தொல்காப்பியர் மூன்று சார்பெழுத்துகளுள் ஒன்றாகக் கூறினார். நன்னூலார் பத்துச் சார்பெழுத்துகளுள் ஒன்றாகக் கூறியுள்ளார். ஆனால், நேமிநாதர் முதலெழுத்து என்று கூறியுள்ளார். இந்தப் புதுமை, இந்தத் தனிநிலை ஆய்த எழுத்துக்கு மட்டுமே உண்டு. (30)

வன்மையான ஒலியினைக் கொண்டது வல்லினம். மென்மையான ஒலியினைக் கொண்டது மெல்லினம்; இடைமையான ஒலியினைக் கொண்டது இடையினம்; இம்மூன்று ஒலியினையும் பெறாமல் நுட்பமான ஒலியினைக் கொண்டிருப்பதனாலும் ஆய்தம் தனிநிலை. (31)

தமிழில் உயிரெழுத்து பன்னிரண்டு, மெய்யெழுத்துப் பதினெட்டு, ஆய்தம் ஒன்று ஆக மொத்தம் (12 + 18 + 1) முப்பத்தொன்று என்பதனையும் - தமிழ் எழுத்துகளுக்கு அடிப்படை ஒலிகள் முப்பத்து ஒன்று மட்டுமே என்பதனையும் நுட்பமாக இந்தச் சிறப்பு மிகுந்த ஆய்த எழுத்து நமக்கு எடுத்துக் காட்டிக் கொண்டிருக்கிறது. முப்பத்தொரு தனிநிலைகளைக் கொண்டு.

## முடிவுரை

ஆய்த எழுத்து நுட்பமான ஒலியினை உடையது. முப்பத்தொரு வகையான தனித்தன்மை வாய்ந்தது ஆய்த எழுத்து. **தனிநிலை** என்றாலே **சிறப்பு நிலை** என்றுதான் பொருள்.

எழுத்து வடிவம் கொண்டு விளங்குகின்ற ஆயிரக்கணக்கான மொழிகளுள் எந்த எழுத்துக்கும் நமது ஆய்த எழுத்தினைப் போன்ற சிறப்பினைப் பெற்ற எழுத்தில்லை; அதனால், ஆய்த எழுத்துச் **சிறப்பு நிலை** எழுத்து.

நமது தாய்மொழியான தமிழ் மொழியிலேயே ஆய்த எழுத்தினைப் போன்ற சிறப்புத் தன்மைபெற்ற எழுத்து வேறெதுவும் இல்லை.

இந்தப் பெருமை தமிழ் மொழிக்கும் தமிழ் இனத்துக்கும் தமிழ் நாட்டுக்கும் வாய்த்த பெருமையாகும்.

வாழ்க ஆய்த எழுத்து!

# 2. ஆய்த எழுத்து ஓர் ஆய்வு

## தலையுரை

உலக முதன்மொழியான முத்தமிழில் ஆய்த எழுத்துக்கு மூன்றாவது இடம் ஒதுக்கப்பட்டுள்ளது; முற்றிலும் விலக்கிவைக்கப் பெற்றுள்ளது. ஆய்தம் மூன்று புள்ளிகளை உடையதா?

ஆய்தம் அரை மாத்திரை; கால் மாத்திரை மட்டுமே பெறும் என்பது சரியா? ஆய்த எழுத்து மெய்யெழுத்து மட்டுமா?

ஆய்த எழுத்தினைத் தொல்காப்பியர் எவ்வாறு மதிக்கின்றார்? ஆய்த எழுத்தினைத் திருவள்ளுவர் எவ்வாறு மதிக்கின்றார் என்று ஆராய்ந்து ஆய்தத்தின் தகுதியினை நிலைநிறுத்துவதே இக் கட்டுரையினது நோக்கம்.

## உடலுரை

தொல்காப்பியத்துக்கு உரை எழுதிய இளம்பூரணர் தொல்காப்பிய நூற்பாவைத் தொடங்கும்போதே "எழுத்தெனப் படுப அகரமுதல னகர இறுவாய் முப்ப..தென்ப சார்ந்து வரல் மரபின் மூன்றலங்கடையே" என்று பதிப்பித்துள்ளார்.

அடுத்து "அவைதாம் குற்றியலிகரம் குற்றியலுகரம் ஆய்தம் என்ற முப்பாற் புள்ளியும் எழுத்தோரன்ன" என்றும் ஆய்தம் பற்றி கூறப்பெற்றுள்ளது.

முதல் நூற்பாவில் ஆய்தம் விடப்பெற்று அடுத்த நூற்பாவில் சார்பெழுத்துடன் ஆய்த எழுத்துச் சேர்க்கப்பெற்றுள்ளது.

தொல்காப்பியத்தின் முப்பத்தெட்டாவது நூற்பா "குறியதன் முன்னர் ஆய்தப் புள்ளி உயிரொடு புணர்ந்த வல்லாறன் மிசைத்தே" என்று கூறுகிறது.

ஆய்தம்

மூன்று புள்ளிகளை உடைய எழுத்தா?

ஆய்தம் என்பதற்கு நுட்பமானது; நுட்பமான ஒலியினை உடையது என்று பொருள்.

"குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் என்ற முப்பாற் புள்ளியும் எழுத்தோ ரன்ன" என்ற நூற்பாவில் குற்றியலிகர எழுத்தும் குற்றியலுகர எழுத்தும் ஆய்தமும் மெய்யெழுத்தின் தன்மை கொண்டவை என்றும்; அரை மாத்திரை அளவு கொண்டவை என்னும் பொருளில் இந்த நூற்பா சிறப்பானதாகும்.

முப்பாற் புள்ளி என்றது - ஆய்தம் மூன்று புள்ளிகளைக் கொண்டது என்னும் பொருளினைக் கொண்டதன்று.

இந்த நூற்பாவின் பொருளைத் தவறாகப் புரிந்துகொண்டு, ஆய்த எழுத்து மூன்று புள்ளிகளைக் கொண்டது என்று எழுதிக் கொண்டிருக்கின்றோம். அஃது ஒரு புள்ளியைக் கொண்டது என்று முனைவர் வ.சுப. மாணிக்கனார் கூறியுள்ளார்.

புள்ளி என்பது தொடக்கத்தில் இவ்வாறு | இடப்பெற்றதனால். சிறுவர் சிறிய குச்சியைக் குழியில் இட்டுக் கில்லி ஆடுவர். அப்பொழுது அந்தக் குச்சி பறவை ( புள்ளைப் போல் ) யைப் போல் பறந்து சென்றதனால், அதனைப் புள் என்றனர். அதுவே காலப்போக்கில் புள்↗புள்ளி என்று ஆகிவிட்டது. இவ்வாறு எழுதுவதென்றால் நேரம் கூடுதலாகும். விரைந்து எழுதியவர் ⊙ என்று எழுதிவிட்டனர். அதனாலேயே | இப்படி எழுதப்பட்ட புள்ளி ⊙ இப்படி எழுதவேண்டிய சூழ்நிலைக்கு உருவாகிவிட்டது.

தொல்காப்பியத்தின் 2ஆவது நூற்பா "ஆய்த மென்ற முப்பாற் புள்ளி" என்கிறது 38 ஆவது நூற்பா ஆய்தப் புள்ளி என்கிறது. இவற்றால் நாம் அறிந்து கொள்ள வேண்டியதாவது. ஆய்தம் ஒரு புள்ளி ⊙ அல்லது ⊙⊙ இருபுள்ளி என்று கருதவேண்டியுள்ளது.

## புதிய ஆய்வு

ஆய்த எழுத்து இருபுள்ளி ⊙⊙ பெற்று, ஒருமாத்திரை அளவு கொண்ட எழுத்தாக இருந்திருத்தல் வேண்டும். ⊙⊙ இருபுள்ளி கொண்ட ஆய்த எழுத்து ஒரு மாத்திரை உடைய எழுத்து என்பதனால், அதனை அரை மாத்திரை அளவு உடையதாக மாற்றுவதற்காக அதன்மேல் ஒரு புள்ளியினை ஃ என அமைத்திருப்பர். அதனால் அது மூன்று புள்ளி ஆனது போலும். ஆனால், தொல்காப்பியர் கூறும் முப்பாற் புள்ளி என்பது இஃதன்று." குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் முப்பாற்புள்ளி" என்பதனை உரையாசிரியர் தவறாகப் புரிந்து கொண்டனர். தொல்காப்பியர் கூறுவது அஃதன்று. குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் மூன்றும் புள்ளி பெற்ற மெய்யெழுத்தின்

தன்மையைப் பெறும்; அ்.தாவது அரை மாத்திரை பெறும் என்பதுவே அது. (கு், சு், டு், து், பு், று்; கி், சி், டி், தி், பி், றி்.)

## சான்று

பழங்காலத்தில் ‘எ’ வை நெடிலாகவும் (எணி); ‘ஒ’ வை நெடிலாகவும் (ஒணான்) பயன்படுத்தினர். எ - என்னும் நெடிலைக் குறிலாக்க மேலே புள்ளியிட்டு எ் - லி என்று எழுதினர். அதனைப் போலவே ஒ என்னும் நெடிலைக் குறிலாக்க ஒ் என்று ( ஒ்ன்று ) புள்ளி இட்டு எழுதினர். அதே முறையினை ஆய்த எழுத்தினுக்குப் பயன்படுத்தியிருக்கலாம்.

## ஆய்தப் புள்ளி

“குறியதன் முன்னர் ஆய்தப் புள்ளி உயிரொடு புணர்ந்த வல்லாறன் மிசைத்தே” என்று தொல்காப்பிய எழுத்ததிகார முப்பத்தெட்டாவது நூற்பா கூறுகின்றது.

“ஆய்தம் கு சு டு து பு று என்னும் ஆறு குற்றியலுகர எழுத்துகளின் மீது ( அ்.தாவது ஆய்தத்தை அடுத்து ) அமையும் என்று இளம்பூரணரும்

எ-டு : எ்.கு, க்.சு, அ்.து, கு்.று

“வல்லெழுத்துகளுக்கு முன்னர் நின்று அவற்றினோசையை மென்மைப்படுத்தி நிற்கும் இயல்பிற்று ஆய்தம்” என்று க. வெள்ளைவாரணனாரும் கூறியுள்ளனர்

## கு. கோதண்டபாணிப் பிள்ளை

“தொல்காப்பியர் ஆய்தத்தைக் குறிப்பிடுமிடத்து ‘ஆய்தப் புள்ளி’ என்று குறிப்பிடுகின்றார். ஆய்த எழுத்து என்றோ, ஆய்த ஒலி என்றோ இதைக் குறிப்பிட்டாரிலர். தமிழ் எழுத்துகளில் ஆய்தம் மட்டுமின்றி வேறு சில எழுத்துகளுக்கும் புள்ளி இடம்பெறுகின்றன. இவ்வாறு புள்ளியிடுதல் ஏதாவதொரு கருத்தைக் குறிப்பிடுவதற்காகவோ? அல்லது ஒரு நியதியை ஓர் ஒழுங்கு முறையைப் பின்பற்றி இவை புள்ளி பெற்றனவா என்பவை பற்றி இங்கு ஆராயப் பெறுகின்றது.

“ஆய்தப் புள்ளி வல்லெழுத்து ஆறன்மேல் இடப்பெற்றது என்பது தொல்காப்பியத்திலிருந்து தெரிகின்றது.” “நா” என்று இவ்வாறு எழுதப் பெற்றிருத்தல் வேண்டும் இப்பொழுது எழுதப் பெறுவது

போல "எ.்.கு" என்று எழுதப் பெற்றதன்று "காசு" என்று எழுதப் பெற்றது என்பதனையே தொல்காப்பியர் குறிப்பிட்டார் போலும்:"

## அடியுரை

ஆய்த எழுத்து முதலாவதான எழுத்து; ஆய்த எழுத்து மூன்று புள்ளிகளைக் கொண்டது எதனால்; ஆய்த எழுத்துத் தனிநிலை என்பதற்குரிய காரணங்கள்; ஆய்த எழுத்து எத்தனை விதமான மாத்திரையைப் பெறுகின்றது; ஆய்தம் உயிரா? மெய்யா? உயிர்மெய்யா? ஆய்தம் எவ்வாறு மூன்று புள்ளி ஆனது?

தொல்காப்பியர் சொன்ன முப்பாற் புள்ளி எது? குற்றியலுகர எழுத்துகளின் மீது புள்ளியிட்டனர் எகர, ஒகரம் புள்ளி ஏன் பெற்றன? போன்ற செய்திகளுக்கு எல்லாம் விளக்கம் பெற்றோம். மேலும், ஆய்த எழுத்தினை ஆய்வு செய்து ஒரு நூலே எழுதலாம் என்பதனை அறிவித்துக் கட்டுரையினை நிறைவு செய்கின்றேன்.

# 3. ஆய்த எழுத்து - உயிரா? உயிர்மெய்யா?

## முன்னுரை

தமிழெழுத்துகளை உயிரெழுத்து - மெய்யெழுத்து - ஆய்த எழுத்து என்று வகைப்படுத்தியுள்ளனர். தமிழ்மொழி அறிவியல் மொழி. உடல் - உயிர் - உரை என்று கொள்ளுதல் வேண்டும்.

தாயின் வயிற்றில் முதலில் உடல் உருவாகின்றது. பிறகுதான் அதில் உயிர் சேர்கின்றது. வெளியே வந்தவுடனே - குழந்தை கொடுக்கும் முதற்குரல் - அ‥ - என்பதுதான். அதன் பிறகே அழுகை ஒலி. அதனால், முதலில் உடல் - மெய்யெழுத்துகளும்; பிறகு உயிர் உயிரெழுத்துகளும்; அதன் பிறகே உரை - ஒலி, அ∴தாவது - ∴ - ஆய்தம்.

அகரச் சுவடி - அகரத்திலிருந்து கற்றுக்கொடுப்பது என்று பொருள். அரிச்சுவடி என்பது - திருமால் சுவடி என்றுதான் பொருள்.

இவ்வாறு சுவடி ஆவணப்படுத்தியோர் - ஆன்மிகக் கருத்தினை உள்ளடக்கிக்கொண்டு, முதலிலே உடலை (பிணத்தை) முதலில் கூறக்கூடாது என்று கருதிக்கொண்டு - உயிரை - அ∴தாவது உயிர் எழுத்துகளை முதலிலும் - மெய்யெழுத்துகளை இரண்டாவதாகவும் - ஆய்த எழுத்தினை மூன்றாவதாகவும் அமைத்துவிட்டனர். அதனையே இந்நாள்வரையிலும் கடைப்பிடித்துக்கொண்டு வருகிறோம்.

முதலில் ஆய்த எழுத்து; இரண்டாவது மெய்யெழுத்துகள்; மூன்றாவதாக உயிரெழுத்துகள்; நான்காவதாக உயிர்மெய் யெழுத்துகளை அமைத்திருத்தல் வேண்டும்.

ஆய்த எழுத்து மெய்யெழுத்தா? உயிர்மெய்யெழுத்தா? அல்லது இரண்டும் சேர்ந்ததா? என்று ஆராய்வதே இக்கட்டுரையினது நோக்கம்.

தொல்காப்பியத்தில்

"உருவினும் இசையினும் அருகித் தோன்றும்
மொழிக்குறிப் பெல்லாம் எழுத்தின் இயலா
ஆய்தம் அஃகாக் காலை யான" (தொல்.40)

இந்த நூற்பாவுக்கு - உரையாசிரியர் இளம்பூரணர் - "ஒருபொருளினது உருவத்தின்கண்ணும் ஓசையின்கண்ணும் சிறுபான்மையாய்த் தோன்றும் குறிப்பு மொழிகளெல்லாம் ஆய்த எழுத்தானிட்டு எழுதப்பட்டு நடவா (அ∴து எக்காலத்துமோ எனின் அன்று) அவ் ஆய்தம் தன் அரை மாத்திரை அளபாய்ச் சுருங்கி நில்லாது (அவ்வுருவும் இசையது மிகுதியும் உணர்த்துதற்கு) நீண்ட காலத்து அந் நீட்சிக்கு" - எ-டு: க∴றென்றது - என்பது உருவு; சு∴றென்றது என்பது இசை, என்று குறித்துக் காட்டியுள்ளார்.

"அவ் ஆய்தம் தன் அரை மாத்திரை அளபாய்ச் சுருங்கி நில்லாது, அவ் வுருவும் இசையது மிகுதியும் உணர்த்துதற்கு நீண்ட காலத்து அந் நீட்சிக்கு" என்று குறிப்பிட்டிருப்பதிலிருந்து ஆய்தம் - தன் அளவான அரை மாத்திரை ஓசையைவிட நீண்டு ஒலிக்கும் - என்பதனைக் கூறியுள்ளார்.

ஆகையால், முற்றாய்தம் - ஒரு மாத்திரை அளவும் - மெய்யாக இயங்கும்போது அரை மாத்திரையும் - ஆய்தக் குறுக்கத்தின்போது கால் மாத்திரை அளவும் கொண்டு ஒலிக்கும் என்று கொள்ளுதல் வேண்டும்.

அதனால்தான் ஆய்தத்துக்குத் "தனிநிலை" என்று பெயரிட்டிருக்கின்றனர். ஆய்தம் எப்படியெல்லாம் தனிநிலை என்பதனை - விளக்கினால் அதுவே ஒரு கட்டுரையாக விரியும். ஒன்றனை மட்டும் இங்கே சுட்டிக்காட்டிவிடுகிறேன்.

உயிருடனும் சேராது மெய்யுடனும் சேராது அதனால் ஆய்தம் தனிநிலை என்கின்றனர். இது தவறு. ஆய்தம் உயிருடனும் சேரும், மெய்யுடனும் சேரும், உயிர்மெய்யுடனும் சேரும் என்பதால்தான் ஆய்தம் தனிநிலை என்று கூறப்பெறுகின்றது.

ஆய்தம் அரை மாத்திரை பெறுகின்ற இடம் - எ∴கு, க∴சு - என்கின்ற இடம். ஆய்தம் கால் மாத்திரை பெறுகின்ற இடம் - அல் + திணை அ∴றிணை, முள் + தீது = மு∴டீது ஆகிய இடங்கள்.

ஒருமாத்திரை பெறுகின்ற இடத்தினைத் திருவள்ளுவர் ஒருவர் மட்டுமே - தமது அரும் படைப்பான திருக்குறளில் பதின்மூன்று குறள்களில் பயன்படுத்திக் காட்டியுள்ளார். இந்த உண்மை தெரியாமல் உரையாசிரியர் சிலர் - அந்தக் குறள்களைத் திருத்தி வெளியிட்டுள்ளனர்.

## திருக்குறள் சான்று

திருவள்ளுவர் தமது திருக்குறளில் அய்ம்பத்தாறு இடங்களில் ஆய்த எழுத்தினைப் பயன்படுத்தியுள்ளார். அவற்றுள் நாற்பத்து மூன்று

குறள்களில் மெய்யெழுத்தாகவும் - பதின்மூன்று குறள்களில் உயிர்மெய்யெழுத்தாகவும் பயன்படுத்தியுள்ளார்.

அவற்றைக் காண்போமாக:-

**அறத்தா றிஃதென வேண்டா சிவிகை**
**பொறுத்தா னோ டூர்ந்தா னிடை** **(திருக். 37)**

இந்தக் குறளில் "அறத்தா" - என்பது புளிமா. மா முன் நிரை அமைதல் வேண்டும். ஆய்தத்தினை இங்கு மெய்யாகக் கொண்டால், வெண்டளை பிழையாகிவிடும். அதனால், இங்கு ஆய்தத்தினை உயிர்மெய்யாக அ∴தாவது

**"அறத்தா றிகுதென" -க் கொள்ளுதல் வேண்டும்.**

இ∴து+என = இ∴தென.

இந்த நுட்பம் தெரியாமல் எல்லாப் பதிப்பிலும் "அறத்தா றிதுவென" என்றே பதிப்பித்துள்ளனர்.

**"அன்பீனு மார்வ முடைமை அஃதீனு**
**நண்பென்னு நாடாச் சிறப்பு"** **(திருக்.74)**

அன்பீனும் - காய். காய்முன் நேராக - ஆர்வம் - என்று நேராகத் தொடங்கியுள்ளார். ஆர்வம் -தேமா. மாமுன் நிரை அமைதல் வேண்டும். அ∴தீனும் - என்று - ஆய்தத்தில் தொடங்கியுள்ளார். இங்கு - ஆய்தத்தினை - உயிர்மெய்யாகக் கொள்ளுதல் வேண்டும்.

இந்த நுட்பம் அறியார் - அது ஈனும் - என்று பதிப்பித்துள்ளனர்.

**"அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவன்**
**பெற்றான் பொருள்வைப் புழி"** **(திருக்.226)**

அற்றார் - தேமா; மாமுன் நிரை வருதல் வேண்டும். அழிபசி; அழிபசி - கருவிளம்; விளமுன் நேர் வருதல் வேண்டும். தீர்த்தல்; தீர்த்தல் - தேமா; மாமுன் நிரை வருதல் வேண்டும். அடுத்த சீர் அ∴தொருவன் என்று அமைந்திருக்கின்றது. இங்கு ஆய்த எழுத்தினை மெய்யெழுத்தாகக் கொண்டால், மாமுன் நேர் என்று அமைந்து வெண்டளை பிழையாகிவிடும்.

இந்த இடத்தில் - ஆய்த எழுத்தினை உயிர்மெய்யாகக் கொள்ளுதல் - ஆம்; அகுதொருவன் என்பதனைப் போல் ஒலித்தல் வேண்டும். அ∴தொருவன் என்பதனைப் போல் ஒலித்தல் கூடாது. அகுதொருவன் என்று ஒலித்தல் மட்டுமில்லை - அவ்வாறுதான் கருதுதல் வேண்டும். அப்பொழுதுதான் வெண்டளை பிழையாமல் அமையும்.

(அகுதை என்ற ஒரு வள்ளல் இருந்தார் என்பதனையும் இதனுடன் இணைத்துச் சிந்திக்கலாம்.

"ஈதல் இசைபட வாழ்தல் அஃதல்ல
தூதியம் இல்லை உயிர்க்கு" (திருக். 231)

வாழ்தல் - தேமா. மாமுன் நிரை அமைதல் வேண்டும் என்று கருதிக்கொண்டு பலரும் - அதுவல்லது - என்றே பதிப்பித்துள்ளனர்.

"காய்முன் நேரும் விளமுன் நேரும்
மாமுன் நிரையும் வரும்வெள் ளைக்கே"

என்னும் காக்கை பாடினியாரின் நூற்பா சரியானதாக அமையும்.

வெண்பாவின் இலக்கணம் தெரியாமல் திருவள்ளுவர் மாமுன் - அஃதொருவன் என்று ஆய்தத்தினை மெய்யாக அமைப்பாரா?

வெண்டளை பிழையாக அமைந்துவிடுமே என்று கருதி - அது ஒருவன் - என்று நிரையில் அமைத்தல் கூடாதா? - அவ்வாறு அமைத்தால் வேறொரு பிழை நேரும். அதனை உணர்ந்தே இந்த முறையினைத் திருவள்ளுவர் கையாண்டுள்ளார்.

அது - என்பது - சுட்டே இல்லை. தொல்காப்பிய விதிப்படி - அஃது - என்பதுதான் சுட்டு. வருகின்ற சொல் உயிரெழுத்தில் இருக்குமானால் ஆய்தம் அப்படியே இருக்கும். உயிர்மெய்யாக இருக்குமானால் ஆய்தம் கெடும் என்கிறார் தொல்காப்பியர்.

"முன்னுயிர் வருமிடத்து ஆய்தப் புள்ளி
மன்னல் வேண்டும் அல்வழி யான" (தொல்.423)

"ஏனை முன்வரினே தான்நிலை இன்றே" (தொல். 424)

அஃது என்னும் சுட்டுச் சொல்லினை அடுத்து உயிரெழுத்தினை முதலாவதாகக் கொண்ட சொல் வருமாயின் ஆய்தம் அப்படியே இருக்கும். உயிர்மெய்யெழுத்தினை முதலாவதாகக் கொண்ட சொல் வருமாயின் ஆய்தம் கெடும். எ-டு: அஃது ஆடு; அது கழுதை. இந்த நிலை இருப்பதனால்தான் - அஃதொருவன் - என்று ஆய்தத்துடன் சுட்டிக் கூறுகின்றார் திருவள்ளுவர்.

"வேண்டாமை யன்ன விழுச்செல்வ மீண்டில்லை
யாண்டு மஃதொப்ப தில்" (திருக்.363)

வேண்டாமை காய் - அதனால் அன்ன நேரில் தொடங்கியுள்ளார். அன்ன - தேமா. அதனால் விழுச்செல்வம் நிரையில் தொடங்கியுள்ளார். விழுச்செல்வம் - காய். அதனால் ஈண்டில்லை என்று நேரில்

தொடங்கியுள்ளார். ஈண்டில்லை - என்பது - காய். அதனால் யாண்டு என்று நேரில் தொடங்கியுள்ளார். யாண்டு என்பது தேமா. இப்பொழுது நிரையில் தொடங்குதல் வேண்டும். அ்.தொப்ப - என்று - ஆய்தத்தில் தொடங்கியுள்ளார். இங்கே ஆய்தத்தை மெய்யாக எடுத்துக்கொண்டால், வெண்டளை பிழையாகிவிடும். இங்கே ஆய்தத்தை உயிர்மெய்யாகக் கொள்ளுதல் வேண்டும். இல் - நாள் என்னும் வாய்பாடு.

"கற்றில னாயினுங் கேட்க அஃதொருவற்கு
ஒற்கத்தின் ஊற்றாந் துணை." (திருக். 414)

இந்தக் குறளில் கேட்க - தேமா. மாமுன் நிரை அமைதல் வேண்டும். அ்.தொருவற்கு என்று ஆய்தம் அமைந்திருப்பதனால், இங்கும் ஆய்தத்தினை - உயிர்மெய்யாகக் கொள்ளுதல் வேண்டும்.

"பொச்சாப்பார்க் கில்லை புகழ்மை அஃதுலகத்
தெப்பால்நூ லோர்க்குந் துணிவு" (திருக்.533)

புகழ்மை - புளிமா மாமுன் நிரை அமைதல் வேண்டும். ஆனால், அ்.துலகத் - என்று ஆய்தம் அமைந்துள்ளது. இங்கும் ஆய்தத்தினை உயிர்மெய்யாகக் கொள்ளுதல் வேண்டும். இந்த நுட்பம் அறியார் பதிப்பில் "அது உலகத்து" என்று பதிப்பிக்கப்பெற்றுள்ளது.

"இழுக்காமை யார்மாட்டும் என்றும் வழுக்காமை
வாயின் அஃதொப்ப தில்" (திருக். 536)

இந்தக் குறளில் - வாயின் தேமா. அடுத்து அ்.தொப்ப என்று - அமைத்திருப்பதனால் - இங்கும் - ஆய்தத்தினை உயிர்மெய்யாகக் கொள்ளுதல் வேண்டும். இந்த உண்மை உணர்ந்தோர் பதிப்பில் - அ்.தொப்ப - தில் - என்றும் - இந்த உண்மையை உணராதார் பதிப்பில் - அதுவொப்ப - தில் - என்றும் பதிப்பிக்கப்பெற்றுள்ளது.

"கல்லார் பிணிக்குங் கடுங்கோன் அஃதல்ல
தில்லை நிலக்குப் பொறை" (திருக். 570)

கடுங்கோன் - புளிமா - மாமுன் நிரை அமைதல் வேண்டும். அ்.தல்ல - து - என்று ஆய்தம் அமைந்துள்ளது. இங்கும் ஆய்தத்தினை உயிர்மெய்யாகக் கொள்ளுதல் வேண்டும்.

"அற்றால் அளவறிந் துண்க அஃதுடம்பு
பெற்றான் நெடிதுய்க்கு மாறு" (திருக். 943)

உண்க - என்பது -- தேமா. மாமுன் நிரை அமைதல் வேண்டும். அ்.துடம்பு - என்று - ஆய்தம் அமைந்துள்ளது. ஆய்தத்தினை இங்கு உயிர்மெய்யாகக் கொள்ளுதல் வேண்டும்.

"பண்புடையார்ப் பட்டுண் டுலகம் அஃதின்றேல்
மண்புக்கு மாய்வது மன்" (திருக்.996)

உலகம் - புளிமா. மாமுன் நிரை அமைதல் வேண்டும். அ்.தின்றேல் என்று ஆய்தம் அமைந்துள்ளது. இங்கும் ஆய்தத்தினை உயிர்மெய்யாகக் கொள்ளுதல் வேண்டும்.

"கவ்வையால் கவ்விது காமம் அஃதின்றேல்
தவ்வென்னுந் தன்மை யிழந்து" (திருக்.1144)

காமம் - தேமா. மாமுன் நிரை அமைதல் வேண்டும். அ். தின்றேல் என்று ஆய்தம் அமைந்துள்ளது. இங்கும் ஆய்தத்தினை உயிர்மெய்யாகக் கொள்ளுதல் வேண்டும்.

"இன்பம் கடல்மற்றுக் காமம் அஃதடுங்கால்
துன்பம் அதனின் பெரிது" (திருக்.1166)

காமம் - தேமா. மாமுன் நிரை அமைதல் வேண்டும். அ். தடுங்கால் - என்று ஆய்தம் அமைந்துள்ளது. இங்கும் ஆய்தத்தினை உயிர்மெய்யாகக் கொள்ளுதல் வேண்டும்.

## முடிவுரை

அ்.தொருவன் - 38, அ்.திலார்க்கு - 80, அ்.தில்லார் 170, அ். தொருவன் - 220. அ்.தில்லார் 236, அ்.துண்டேல் - 368, அ்.திறந்து - 476, இவை உயிர் வந்ததனால் - அ்.து - என்று - ஆய்தத்தினை நீக்காமற் பயன்படுத்தியுள்ளார் திருவள்ளுவர். அதனை மறத்தல் - 32, அது விளிந்தற்று - 332, அதுபெற்றால் - 333, அதுபொருள் - 477, அதுநோக்கி வாழ்வார் - 528, அ்.து என்னும் சுட்டினை அடுத்து உயிர்மெய் வந்ததனால் - ஆய்தம் கெடுத்து அது என்று புணர்த்தியுள்ளார் திருவள்ளுவர்,

இந்தப் பொதுவிதி இருப்பதனால்தான் - அ்.து என்று - ஆய்தத்துடன் அமைத்திருக்கிறார் திருவள்ளுவர். அதனால் ஆய்த எழுத்து - ஒரு மாத்திரை பெறும் "அகு" என்னும் நிலையிலும்; அ்.து என்று அரைமாத்திரை பெறும் மெய்யெழுத்து நிலையிலும்; அ்.றிணை - என்று கால்மாத்திரை பெறும் ஆய்தக் குறுக்கமாகவும் - ஆய்தம் மூன்று நிலைகளில் அமையும். உயிர்மெய்யாக - மெய்யாகத் திருவள்ளுவர் ஆய்தத்தினை அமைத்தெழுதியுள்ளார் என்பதனை அறிந்துகொள்வோமாக.

# புலவர் வெற்றியழகன்



விழுப்புரம் மாவட்டம் ஊருணி என்னும் சிற்றூரில் 12.10.1936 இல் குப்புசாமி - முனியம்மாள் இணையருக்கு மகனாகப் பிறந்தார். ஜெயராமுலு என்னும் இவருடைய இயற்பெயரை வெற்றியழகனாக மாற்றிக் கொண்டார். இதனைப் போலவே தம் மக்களுக்கும் பெயரப் பிள்ளைகளுக்கும் தனித்தமிழ்ப் பெயர்களே சூட்டியுள்ளார்.

1954 முதல் இந்நாள் வரையிலும் எல்லா ஏடுகளிலும் இவரது படைப்புகள் வெளிவந்து கொண்டிருக்கின்றன. 1973 இல் சென்னைப் பல்கலைக் கழகத்தில் புலவர் பட்டம் பெற்றார். தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் பகுதி நேரப் பணியாகப் பிழை திருத்தும் பணியை ஏற்றார். பிழை திருத்தும் பணியையே இது வரையும் தம் வாழ்க்கைக்குரிய பணியாக ஏற்றுச் செயல்பட்டு வருகின்றார். ஆயிரக்கணக்கான நூல்களைப் பிழை திருத்தியுள்ளார்.

வானொலி, தொலைக்காட்சிகளில் பங்கு பெற்றுள்ளார். இவரது பாடல்கள் தமிழ்நாட்டுப் பாட நூல்களில் இடம் பெற்றுள்ளன. தொல்காப்பியம், நன்னூல் திருக்குறள் வகுப்புகளைத் தொடர்ந்து நடத்திக்கொண்டிருக்கின்றார். பற்பல இலக்கிய மேடைகளில் சொற்பொழிவு நடத்திவருகிறார். இராவண காவியம், புரட்சிக்கவிஞர், திருக்குறள் தொடர் சொற்பொழிவுகளை நிகழ்த்திக் கொண்டிருக்கின்றார்.

இவருடைய நூல்கள் இதுவரையும் 40 வெளிவந்துள்ளன. 100 நூல்களை வெளியிடத் திட்டமிட்டுள்ளார். தொல்காப்பிய - எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரம் மூன்றனுக்கும் எளிய உரையெழுதி வெளியிட்டுள்ளார். திருக்குறளுக்குப் பகுத்தறிவு உரை எழுதி வெளியிட்டுள்ளார். தமிழக அரசின் பாவேந்தர் விருது, கபிலர் விருது உள்ளிட்ட பல விருதுகளைப் பெற்றுள்ளார். இவரது படைப்புகளை ஆராய்ச்சி செய்து 'சிந்தனையாளர் வெற்றியழகன்' என்னும் தலைப்பில் ஜெயபாலன் என்பவர் இளமுனைவர் பட்டம் பெற்றுள்ளார். சீர்திருத்த நெறிமுறையும் சிந்தனையில் பெரியாரையும் சுமந்து வாழும் இவர் மிகச்சிறந்த பகுத்தறிவுவாதி.

-கவிஞர். கோ. அழகியநம்பி